7th December 1961]

SRI S. RAMALINGA PADAYACHI : திருச்சி ஜில்லாவிலே மருதையாறு நொய்யலாறு திட்டங்களை முதல் பிரியாரிட்டி கொடுத்து எடுத்துக் கொண்டார்கள். ஆனால் அந்த திட்டங்கள் இந்த ஆண்டிலே துவக்கப்படாமல் நிறுத்தப்பட்டு விட்டன. வேறு எந்த ஆண்டில் இந்த திட்டங்கள் நிறைவேற்றப்படும் என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : திருச்சி ஜில்லாவிலே மருதையாறு திட்டம், நொய்யால் ரிஸர்வாயர் திட்டம், ஆகிய திட்டங்கள் பரிசீலனை செய்யப்பட்டு வருகின்றன. இறுதியான முடிவுக்கு வந்தபிறகுதான் அந்த திட்டங்கள் எடுத்துக் கொள்ளப்படும். எல்லா திட்டங்களையும் பரிசீலனை செய்துக் கொண்டிருக்கிறோம்.

SRI K. ANBAZHAGAN : இந்தத் திட்டங்களெல்லாம் ஏறத்தாழ பத்து ஆண்டு காலத்திற்கு முன்னாலே அரசாங்கத்தினால் பரிசீலனை செய்யப்பட்டிருக்கின்றன. மூன்றாவது திட்டம் துவங்கி ஆறு திங்கள்கள் ஆகியும் இன்னும் இவைகள் பரிசீலனை கட்டத்திலே இருக்குமேயானால் மூன்றாவது திட்டத்திலே இவைகள் நிறைவேற்றப்படும் என்பதற்கு அமைச்சரவர்கள் ஆதாரத்தோடு பதிலளிப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினருக்கு நான் சொல்லுவது என்னவென்றால் எதிலேயும் நம்பிக்கை வைக்க வேண்டும் என்பதுதான். அணைக்கட்டுகள் கட்டுவதற்கு மூன்றாவது திட்டத்திலே எவ்வளவு பணம் ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பதைப் பார்த்து, எந்தத் திட்டத்திற்கு பிரியாரிட்டி கொடுக்க வேண்டும் என்பதையும் யோசித்து அதன்படி செய்கிறோம்.

SRI A. GOVINDASAMY : கொடகநாறு திட்டத்தை முதலிலே நிறைவேற்றுவதற்கு அரசாங்கம் உறுதிமொழி அளிக்குமா ?

THE HON. SRI P. KAKKAN : எது முக்கியம், எது அவசரம் என்பதைப் பார்த்து திட்டங்கள் முடிவு செய்யப்படும்.

*Package Deal Scheme*

*2131 Q.—SRI A. R. MARIMUTHU : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) போர்டு பௌண்டேஷன் உதவியின்கீழ் மேற்கொள்ளப்பட்ட தீவிர சாகுபடித் திட்டம் தஞ்சை ஜில்லாவில் எத்தனை கிராமங்களில் அமுலாக்கப்பட்டது ?

(இ) எத்தனை குடும்பங்களுக்கு என்னென்ன உதவிகள் அளிக்கப்பட்டன ?

(உ) 1961-62-ம் ஆண்டில் மேலும் எத்தனை கிராமங்களுக்கு விஸ்தரிக்கப்படும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a), (b) & (c) : The answer [a] is placed on the table of the House.

[a] Printed as Appendix I on pages 104-105 infra.

[7th December 1961

SRI A. R. MARIMUTHU : தீவிர உற்பத்தி அமுல் செய்யக் கூடிய பிரதேசங்களிலே நீண்ட காலக் கடன்கள் கொடுப்பதைப் பற்றி அரசாங்கம் யோசிக்குமா. ரசாயன உரங்கள் தேவையான அளவுக்கு சப்ளை செய்யப்படும் என்று கூறியும்கூட சாகுபடி சமயத்தில் உரம் கிடைக்காமல் விவசாயிகள் கஷ்டப்படவேண்டிய நிலைமை ஏற்பட்டதன் காரணமாக ஸ்டாக் இல்லாமல் போய் விட்டதா ? ஸ்டாக் இருந்தால் ஏன் தேவையான சமயத்தில் சப்ளை செய்யப்படவில்லை என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் இருக்கிற தகவல்படி தஞ்சை மாவட்டத்திலே வேண்டிய அளவிற்கு ரசாயன உரம் இருக்கிறது. நீண்ட கால கடன்கள் கொடுப்பது இந்த திட்டத்தில் இல்லை. குறுகிய காலக் கடன்கள் கொடுத்து நல்ல முறையிலே பயிர் செய்யப்படவேண்டும் என்பதுதான் நோக்கம்.

SRI A. R. MARIMUTHU : ஸ்டாக் நிறைய இருக்கிறது என்று கனம் அமைச்சர் அவர்கள் பதிலளித்தார். கிராமங்களில் நிறைய ஸ்டாக் இல்லாத காரணத்தால் சப்ளை செய்ய முடியவில்லை என்று சொல்லப்படுகிறது. அப்படி இல்லாமல் எல்லாப் பகுதிகளிலும் நிறைய ஸ்டாக் வைக்கும்படியான ஏற்பாடுகளைச் செய்ய முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஏதாவது ஒன்று அல்லது இரண்டு இடங்களிலிருந்து ஸ்டாக் இல்லை என்ற தகவல் வந்திருக்கலாம். அப்படி இல்லை என்ற தகவல் வந்தால் அதற்கு கவனம் செலுத்தி வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப் படும்.

SRI R. SRINIVASA IYER : இந்த புல் பைனன்ஸ் ஸ்கீம் வந்த பிறகு இந்த கடனைத் திருப்பிக்கொடுக்க வேண்டும் என்று சொல்வதெல்லாம் போன வருஷம் வசூல் செய்ய வேண்டிய கடனையும் இந்த வருஷம் வசூல் பண்ண வேண்டிய கடனையும் சேர்த்து இரண்டு வருஷங்களுக்குள்ள பணத்தை சேர்த்து வசூ லிக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அதாவது போன வருஷம் கொடுத்த கடனையும் இந்த வருஷம் கொடுத்த கடனையும் சேர்த்து வசூல் பண்ண வேண்டும் என்று சொல்லுகிறார்கள். அப்படி சேர்த்து வசூல் பண்ணுவதால் கஷ்டம் ஏற்படுகிறது. ஆகவே ஒரே சமயத்தில் வசூலிக்காமல் இருப்பதற்கு சர்க்கார் உத்தரவு போடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி தனி யாக கேள்வி போடவேண்டும்.

SRI M. S. SELVARAJAN : தஞ்சை ஜில்லாவில் அமுலில் இருக்கக்கூடிய தீவிர சாகுபடி திட்டமானது வெற்றிகரமாக இருக்கிறது என்று அறிவிக்கப்படுகிறது. அப்படியானால் இந்த திட்டத்தை ஒவ்வொரு ஜில்லாவிற்கும் விஸ்தரிப்பதற்கு இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்தினிடம் கேட்டு அதை மற்ற ஜில்லாக்களுக்கும் அமுலுக்குக் கொண்டுவருவதற்கு ஏற்பாடு

* Printed as Appendix I on pages 104-105 infra.

செய்வார்களா? அதைப்பற்றி பரிசீலனை செய்து அதற்கு வேண்டிய பூர்வாங்க நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா என்பதை அறிவிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இதைப்பற்றியும் தனியாக கேள்வி வேண்டும்.

SRIMATHI T. N. ANANDANAYAKI: தஞ்சை மாவட்டத்தில் தீவிர சாகுபடி திட்டம் அமுலுக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறதே அதனால் ஏதாவது உற்பத்தி அதிகமாக ஆகி இருக்கிறது என்பதை கனம் அமைச்சர் அவர்கள் அறிவிப்பார்களா? அப்படி இருந்தால் எந்த அளவுக்கு உற்பத்தி அதிகமாக ஆகி இருக்கிறது என்பதையும் தெரிவிப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: செய்யப்பட்டிருக்கிற பயிர்களைப் பார்த்தால் உற்பத்தி ஆனதில் 100-க்கு ஐந்து முதல் முப்பது வரையில் அதிகமாக ஆகி இருக்கிறது விளைச்சல்.

SRI R. KRISHNASAMI NAIDU: தலைவர் அவர்களே, பல மத்திய சப்ளை மார்க்கெட்டிங் சொசைட்டிகளில் இன்னும் கோடவுன்களில் அதிகப்படியான உரங்கள் இருந்தும் அவைகளுக்கு இப்போதைய குறைந்த விலை நிர்ணயிக்கப்படாமையால் சரியானபடி சப்ளை செய்ய முடியவில்லை என்று சொல்லி வருகிறார்கள் என்றும், அதனால் அதிகப்படியான விலைக்கு ரசாயன உப்பை வாங்க வேண்டியதாக இருக்கிறது என்றும் அதை வாங்கி வருகிறவர்கள் சொல்லுகிறார்கள். ஆகவே ஸ்டாக் அதிகமாக இருந்தும் கிராமப் பகுதிகளில் உர விநியோகம் சரியாக நடைபெறவில்லை என்று தெரியவருகிறது. அப்படி இல்லாமல் ரெவின்யூ போர்டில் சீக்கிரம் விலை நிர்ணயித்து நல்ல முறையில் சப்ளை செய்வதற்கு தக்க நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன் வருவார்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் இராமநாதபுரம் மாவட்டத்தைப்பற்றி குறிப்பிடுகிறார் என்று நினைக்கிறேன். அப்படியானால் அந்த மாவட்டத்தைப்பற்றிய தகவல் அனுப்பினால் அதை கவனித்து வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளுகிறேன்.

SRI A. GOVINDASAMY: தஞ்சை மாவட்டத்தில் அதிகப்படியாக உரம் கொடுப்பது எல்லாம் மிராசுதார்களுடைய கையில் இருக்கிறதா அல்லது விவசாயிகளுடைய கையில் இருக்கிறதா அல்லது கோடவுன்களில் இருக்கிறதா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அவை எங்கே இருக்க வேண்டுமோ அங்கே இருக்கிறது.

SRI S. M. ANNAMALAI: தீவிர உணவு உற்பத்தி திட்டமானது எதிர்பார்த்த அளவுக்கு பலன் கிட்டவில்லை என்று அந்த இலாகா அதிகாரி ஒருவர் சொல்லி இருக்கிறாரே, அது உண்மையா?

அப்படி இருந்தால் அதன் காரணம் என்ன என்பதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்து பார்த்ததா? எதிர்பார்த்த அளவுக்கு வரவில்லை என்றால் அதற்கு என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறார்கள் என்பதையும் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எந்த அளவுக்கு டார்ஜட் போட்டோமோ அந்த அளவுக்கு பலன் கிட்டவில்லை என்றுதான் அவர் சொல்லி இருக்கிறார். குறுகிய கால, நடுத்தர கால விவசாயத்தில் எந்த அளவிற்கு நாம் பலன் எதிர்பார்க்கலாம் என்று திட்டம் போட்டிருந்தோமோ அந்த அளவுக்கு வரவில்லை என்றுதான் அவர் சொல்லி இருக்கிறார்.

*Krishnarayapuram Panchayat*

*2132 *Q.*—SRI N. MARUDACHALAM : கனம் முதல் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) கோவை ஜில்லா கிருஷ்ணராயபுரம் பஞ்சாயத்துத் தலைவர் பஞ்சாயத்து சட்டத்திற்கு விரோதமாய் நடந்ததாக மேற்படி பஞ்சாயத்து மெம்பர்கள் 12—5—1961, 21—2—1961 தேதிகளில் சர்க்காருக்குப் புகார் செய்துள்ளார்களா?

(இ) அதன்மேல் சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக்கை என்ன?

THE HON. SRI C. SUBRAMANIAM : (அ) Only a petition, dated 21st February 1961 from four members of the Krishnarayapuram Panchayat alleging certain irregularities on the part of the President of the above panchayat was received by the Inspector of Municipal Councils and Local Boards, Madras.

(இ) As it is found that there is faction and deadlock in panchayat administration of the Krishnarayapuram Panchayat, the question of taking appropriate action is under the consideration of Government.

SRI N. MARUDACHALAM : கிருஷ்ணராயபுரம் பஞ்சாயத்துத் தலைவர்மீது அந்த பஞ்சாயத்து மெம்பர்கள் புகார் செய்திருக்கிறார்கள். அந்தப் புகார்களின் விவரம் என்ன என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஒரு கட்சி எதிர்க்கட்சியின் மீது செய்யக்கூடிய புகார்தான். அப்படியேதான் புகார் இங்கேயும் செய்யப்பட்டிருக்கிறது. அதைப்பற்றி அரசாங்கம் பரிசீலனை செய்யும். அதுவும் சரியில்லை என்று தோன்றினால் அதைப்பற்றி மீண்டும் பரிசீலனை செய்து பஞ்சாயத்து சட்டப் பிரகாரம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமோ அந்தப்படி எடுத்துக்கொள்ளப்படும். அதைப்பற்றியும் அரசாங்கம் பரிசீலனை செய்து பார்க்கும்.